Ims0377-8

சைவர் ஜாதிமகிமையும்,

சைவர் முன்னோரும் வடதியும்

 உ 600

# சைவர் ஜாதிமகிமையும்,
# சைவர் முன்னேறும் வழியும்.



சைவப்பிரமுகர்க்கு ஓர் விஞ்ஞாபனம்:—

இந்த உலகத்திலே மனிதர்களுக்கு நல்ல அறிவும் நல்ல செய்கையுமே சிறந்த இலக்கணங்களாம். நல்ல அறிவு நற்செய்கையாவது, தாங்களின்னாரென்றும், தாங்கள் இம்மை, மறுமை, வீடு, என்னும் மூன்றினும் இன்ப மடைவதற்குப் பெரியோர்களால் வகுக்கப்பட்ட செம்மை நெறியின்னதென்றும் தெளிவாகவறிந்து அறிந்தவாறே யொழுகுதலுமாம் அதாவது தங்கள் ஜாதிநிலை யாதென்றும் தங்கள் சமயம் எத்தன்மையதென்று மறிந்து ஒழுகவேண்டு மென்பதே. இப்படிப்பட்ட நல்லஅறிவும் நல்லொழுக்கமுமே நாகரீகமென்பதற்குச்சிறந்த கண்களாம். இக்கண்களில்லாமையினாலே நமது சைவர்கள் மேன்மையடையும்வழி தெரியாது மயங்குகின்றனர். தமது கொள்கைகள் ஸ்மார்த்தரது கொள்கைகளைப்பார்க்கினும் மிகவும் மேம்பட்டனவாயிருந்தும் அவற்றை அநுஷ்டியாமல்மிக்க இழிந்தநிலைமையையடைந்து வருந்துகின்றனர். அதற்குக் காரணம் நூற்கல்வியின்மையும், சமயநெறி ஒழுகாமையினால் வந்த ஒற்றுமையின்மையும், முயற்சியின்மையுமேயாம். ஸ்மார்த்தர்கள் காலத்திற்கு வேண்டிய ஆங்கிலக்கல்வி கற்று, சம்பாத்தியத்திற்கும் அதிகாரத்திற்கும் வேண்டியதுறைகளியாவற்றினும் உன்னத நிலையடைந்து, தமது சமயாசாரவொழுக்கங்களினும் சிறந்து விளங்குவதைக் கண்ணாரக்கண்டும், தாமும்அவ்விதம் முதன்மையாக வேண்டு மென்ற வெண்ணங் கொள்ளாது, முயற்சி யென்பது தங்களுக்கியலாததொன்று, அதற்குறிய மதிநுட்பம் தங்களுக்குக்கிடையாது, அது பிராமணருக்கே பிறவியிலுள்ளதென்றும் அவர்களே தெய்வ சம்பந்தமுடையவர்கள் யென்றும், தப்பெண்ணங்கொண்டு சோம்பித்திரிந்துதம் மவர்கள்வறியராதல் தமது நிலையின் பெருமையை

ஆதலால்இப்பொழுதுள்ள தப்பெண்ணங்களும், மயக்க நிலையும் ஒழியும்பொருட்டு நமது சமயத்தின் ஒப்பற்ற ஏற்றத்தையும், ஜாதி நிலையில் நமது குலத்தின் மேன்மையையும் ஆராய்ந்தறிதல் இன்றியமையாதகடனும்.

சைவவேளாளரென்பார், சைவரென்று தொன்று தொட்டு வழங்கப்பட்டு வருகிறார்கள். சைவசமயக் கொள்கைகளை பரம்பரையாகக் கைகொண்டு வழுவாது ஒழுகிவந்தமையானும், அக்கொள்கைகளியாவற்றையும் பூரணமாய் அநுஷ்டித்தலானும் சைவர் எனச்சிறந்து விளங்கினர். சைவாசாரங்களுட்சிறந்தன.

''இலங்குமுயிர் உடலனைத்தும் ஈசன் கோவில்''

என்ற தமிழ் மறைக்கருத்தின்படி (ஜீவகாருண்யம், கொல்லாமை எல்லாவுயிர்களிடத்தும் இரக்கம் தயை செலுத்துதல், கள், ஊன்முதலியன விலக்குதல்) தங்கள் அருள் நூல்களைக்கற்று அவற்றின்படி நடத்தல் என்பனவாம். இக்கொள்கைகளுக்கு அடிப்படையாகஉள்ளவை உண்மை ஞானமும் தண்ணியவருளுமாம். இம்மேலான சமயாசார அநுஷ்டானங்களையுடையசைவரே, திராவிட வேதத்தின் பிரமாண வாக்கியத்தின்படி அந்தணரா கின்றனர். யாகம் முதலிய காரணங்களை முன்னிட்டு உயிர்க்கொலை செய்பவர்களைப்போலல்லாது, எக்காலத்தும் எவ்வுயிர் களுக்குஞ் செந்தண்மை பூண்டொழுகுதலால், அந்தணரென்ற பெயருக்குச் சைவர்களேசிறந்த உரிமையுடைய வர்களாம்.

''அந்தணரேன்போரறவோர் மற்றேவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டோழுகலான்'' —திருக்குறள்

பிரமத்தை அணுகிநிற்பவன் பிராமணனென்று அழைக்கப்படுதல் போல, சிவத்தை அணுகிநிற்பவர் சைவரென்று சிறப்பிவித்துக்கூறப்பட்டனர். ஸ்மார்த்த மதத்திலே பிராமனர் முதனிலையுடமைபோல, சைவ சமயத்திலே சைவர்கள் முதனிலையுடையவர்கள்.ஸ்மார்த்தர் வழிபடுதெய்வம் பிர்ம்மா, விஷ்ணு, ருத்திரன், என்று சொல்லப்படுகின்ற மூவராம்; சைவர்வழிபடு தெய்வம் இம்மூவர்களையும் தொழிற்படுத்தி நடத்தி,

இம்மூன்று பசுக்களாலும் தொழப்படுகின்ற சிவபெருமானுனவர் ஸ்மார்த்த மதத்திற்கு முக்கியபிரமாணநூல் உயிர்கொன்றுபுரியும் யாகங்களைக்கற்பிக்கும் வேதமும் தாமே எல்லா மனிதருள்ளும் உயர்ந்தோ ரென்றும் ஏனைக்குல மக்களெல்லாம் தமக்கூழியஞ் செய்யும்படி சிருஷ்டிக்கப்பட்ட அடியரென்றும், வற்புறுத்திக்கூறும் ஸ்மிருதிக்கட்டு நூல்களாம் இந்த ஸ்மிருதிகளிலே கூறப்பட்ட வழக்கங்களையும் ஆசாரங்களையும் அநுசரிப்பவர் ஸமார்த்தரென்றழைக்கப்பட்டனர். சைவர்களுக்குச் சிறந்த பிரமாணங்கள் தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலிய அருள் நூல்களும் சிவாகமங்களுமாம், ஸ்மார்த்தாது தத்துவசாஸ்திரம், தங்களைத் தவிர கடவுள் வேறில்லையென்று கூறும் மாயாவாத நூல் களாகிய வியாசர் செய்தவேதாந்த சூத்திரமும் சங்கரபாஷ்யமுமாம்; சைவசமயத்தின் சிறந்த உண்மைகளைத்திரட்டி விளக்கும் நூல் சிவஞானபோதம் சித்தியார் முதலிய சித்தாந்த சாஸ்திரங்களும், சிவாகமத்திலுள்ள ஞானபாகமுமாம், ஸ்மார்த்தர் வழிபடும்முக்கிய பொதுவிடம், உயிர்க்கொலைபுரிந்து காமியங்கருதிச் செய்யும் யாகசாலை; சைவர் வழிபடும் பொதுவிடம் முத்தியின்பத்தைப் பயக்கும்சிவாலயம் ஸ்மார்த்தர்கள் தங்கள் சந்தியாவந்தனத்திலும்காயத்திரிஜெபத்திலும் இந்திரன், சூரியன், முதலிய பலதேவதைகளைத்தெய்வங்களாக பாவித்து வணங்கு கின்றனர்; சைவர்கள் செய்யும் சந்தியாவந்தனம், சிவகாயத்திரி, சிவபூஜை முதலியன உலகத்திலுள்ள மக்கள் தேவர் முதலிய வெல்லா ஜீவராசிகளையும் ரட்சிக்கும் அருட்பெருங் கடவுளொருவருக்கே செலுத்தப்படுகின்றன. ஸ்மார்த்தர்கள் மதகுரு, சங்கராச்சாரியார் முதலிய மடாதிபதிகள்; சைவசமயிகளுக்கு ஆச்சாரியர் திருக்கைலாய பாம்பரையில் வந்த சைவாதீனத்தலைவர்களும், ஆதிசைவருமாம். மனுஸ்மிருதி முதலிய நூல்கள், ஸ்மார்த்தம், யாகம் முதலியவற்றில் ஊனுண்ணல் நன்றென விதித்தலால் ஸ்மார்த்தர் அக்காலங்களில் இப்போதும் ஊன்புசியாதுவிடார்; சைவர் தங்கள் சமயவிரோதமான புலாலுண்ணலை அறவே எக்காலத்தும் ஒழித்தவர்கள். இதுகாறும் கூறியவற்றால் ஸ்மார்த்தரது மதம் வேறு சைவர் சமயம்வேறு என்பதும், இவ்விருவகையா

பதும், வழிபடுமுறைமை சமயாசாரங்கள் வெவ்வே
றென்பதுவும், பிரமாண நூல்கள் வெவ்வேறென்பது
வும், இவ்விரு திறத்தாருடைய ஆச்சாரியர்கள் வெவ்வே
றென்பதுவும் இனிது விளங்கும். சைவ சமயமும்
ஸ்மார்த்தமதமும் ஆதிமுதல் அந்தம்வரை சிறிதும்
ஒற்றுமையுடையனவல்ல. சைவசமயத்தின் முடிவாகிய
சித்தாந்தமும், ஸ்மார்த்தமதத்தின் முடிவாகிய மாயா
வாதமும் ஒன்றிற்கொன்றுநேர் எதிரிடையாய் முரண்
பாடுடையன.

அவ்வாறிருக்கவும் முற்காலத்தில் வடதேசத்
தினின்றுதென்னாட்டிற்குவந்த ஆரிய பிராமணருட்பலர்
சைவசமயப் பெருமையையுணர்ந்து, சமயதீக்ஷைமுதலி
யனபெற்று சைவசமயத்தற் பிரவேசித்தனர். அன்றி
யும் தமிழிலேயிருந்த மறைகளாகியமூல ஆகமங்களைத்
தம்மினத்தாராகிய மற்ற ஆரியர் பொருட்டு ஆரிய
பாஷை யாகிய சமஸ்கிருதத்திலும் மொழி பெயர்த்
தனர் வடமொழியிலுள்ள ஆகமங்களில் தமிழ் மறை
யைப் பற்றியவாக்கியங்களும். அவற்றைச் சிவாலயங்
களிற் பூஜாகாலங்களில் ஓதவேண்டிய முறைகளும்
காணப்படுதலால், அவ்வாகமங்கள் தமிழினின்றே
மொழிபெயர்க்கப்பட்டவைக்குச் சான்றுபகரும். முற்
காலத்தில் ஆரியபிராமணருட்பலர் சைவாச்சாரியர்களி
டத்தும் சைவாதீனத்தலைவர்களிடத்தும் சிவதீக்ஷை
பெற்றும், சைவசமயபிரவேசஞ்செய்து பயபக்தியுடன்
சிவாலயங்களிற் சகல தொண்டூழியங்களையுஞ்செய்தும்
வந்தமையால் சைவர்களது ஆலயங்களிற் பிரவேசித்தற்
கநுமதியும், சிவஸ்தோத்திரங்களைத் தமது கீர்வாண
பாஷையிலமைத்து ஓதுதற்கிடமும்பெற்றனர். இங்ஙனம்
பலவழிகளாலும் பணஞ்சம்பாதித்துத் தமது குடியை
நம் நாட்டில் வலுக்கச்செய்த பின்னர், ஸ்மாத்தர்களிற்
சிலர் சிவ தீக்ஷை சமயப்பிரவேசம்பெறாமலே, சிவ
வேடங்களை மாத்திரம் பூண்டு ஜாதி யென்னுந்தடஞ்
சுழியை உலகவழக்கிலும் ஆகமங்களிலும் புகுத்தித்
தங்கள் மதத்தையும் ஜாதிக்கொள்கைகளையுஞ் சைவ
சமயத்திற்குடன்பாடுபோலப் போதித்தனர். தமது
சமயவுண்மைகளை நன்கு அறியாத சைவர், ஸ்மார்
த்தமதத்தையே தங்கள் சைவசமயமெனமயங்கியும்,
ஸ்மார்த்தமத குருவாகிய சங்கராச்சாரியரைச் சைவாச்

சாரியரெனமதித்தும், ஸ்மார்த்தராது மதாசாரங்களை
பெரிதும் அநுசரித்தும்,சிவதீக்ஷை முதலியனசமைய
அநுஷ்டானங்களைக் கைவிடலாயினர். அது யாத்திரமு
மன்றி மிகுந்தபணஞ்செலவழித்து அந்நிய மதத்தின
ராகிய ஸ்மார்த்தர்களுக்கே சத்திரம்கட்டு வித்தும்
பிராமணபோஜனஞ்செய்வித்தும் தமதுப்பொருள்களை
இழந்தும் அறிவில்லாதுமிக்க இழிவான நிலைமையை
யடைந்தும் அனேனோர்க்கு அடிமையினுமடிமையாய்க்
கொண்டிருப்பதைச் சைவச்செல்வர்களும் சைவசமைய
த்தலைவர்களும் சிந்திக்கக்கடவர். சைவ வேளாளர்
குலத்திலே அரசமரபினரென்பதும், ஆசாரவொழுக்கா
களிலே அந்தணரென்பதும், சாஸ்திரவாயிலாகவும்சரித்
திரவாயிலாகவும் நிலைநிறுத்தப்பட்ட உண்மைகளென்
பதை அறியாது நம்மவருட்சிலர், ஸ்மார்த்தர் முதலிய
பிறஜாதியார் தம்மைச்சூத்திரர் எனஇழிவாகப்பேசவு
நடத்தவும்இடங்கொடுத்துக்கொண்டிருப்பது எவ்வளவ
பேதமை! ஸமார்த்தன் தன்னைப் பெரியனென்று
தன்னிலையறிந்த சைவன் அதனை ஏன் ஒப்புக் கொள்
ளுதல் வேண்டும்? நம் திராவிடப் பிரபுக்கள் நமது
சரித்திரத்தை யாராய்ச்சி செய்யாமலும் நமது சாஸ்தி
ரங்களை படியாமலும் அன்னியமதத்தினர் கூறுவதை
யெல்லாம் ஒப்புக் கொண்டு தம்மைச்சூத்திரர் என்று
கருதுதல் ஒரு பெருந்தவறு அறிவிலியாகிய சைவன்
சிவவேடம் பூண்ட பிராமணனைக்கண்ட மாத்திரத்தே
சுவாமி! சுவாமி!!யென்றுமருண்டுவணங்கிநிற்கின்றான்
அப்பர்சுவாமிகள் முதலிய தனது சமயப்பெரியோரை
சுவாமியென்றழைத்தல் கூடாதென்று அகங்கரிக்கும்
ஸ்மார்த்தனிடத்தே, சைவன் போய்க்காலில் விழுந்து
உடல், பொருள், ஆவி, மூன்றையும் மற்பணஞ்செய்த
லினுமிழிவு வேறென்னுளது? சைவருட்சில முழுமக்கள்
தனமதிப்பும் கௌரமும் அறவேயொழித்துச் செய்யும்
தப்புபசாரங்களினால், ஸ்மார்த்தர்கள் தங்களைப்பூலோக
தேவரென்றும் கடவுள் எனவுமதித்து மகிழ்கின்றனர்
மகிழ்ந்து, தம்மை மதித்து வணங்காதவரிடத்தும்தமது
ஆசிர்வாதங்களைக் காட்டுகின்றார்கள். அவற்றிற்குப்பதி
லாசிர்வாதங்காட்டி விடுதலே பொருத்த முடையதன்றி
வந்தனஞ்செய்தல் அறியாமை யன்றோ? இன்னும் அதி
க்ஷதர்களாகிய ஸ்மார்த்தர்களிடம் உணவுகொள்ளுதல்
சமயவிரோத மென்றறியாது, பிராமணர்கள்உண்டுமி

றிய சோற்றினைத்தம்மினுந்தாழ்ந்த ஜாதியாரோடு நாத்துக்கிடந்து சாப்பிட்டு வருகின்றனர் இது எவ்வளவு விவேகமற்ற செய்கை! ஸமார்த்தர், சிரார்த்தம் முதலிய விசேஷகாலங்களிலும் புண்ணிய ஸ்தலங்களிலும் தங்கள் வருணத்தாருக்கே உணவு பொருள் முதலியன, கொடுத்துதவுவது யாவருமறிந்த விஷயம். சைவாகமங்களும், சைவர்கள் செய்பவேண்டிய சிரார்த்தம் முதலிய சகல சடங்குகளிலும் சைவாச்சாரியர்களாகிய ஆதிசைவர், குருக்கள் முதலியோர்களையே கொண்டு நடத்தவேண்டுமென்றும், அதீக்ஷிதராயும் அந்நிய மதத்தினராயுமுள்ள ஸ்மார்த்தர் முதலியோரை வரித்தல் கூடாதென்றும் விதிக்கின்றன, ஆதலாற் சைவர்கள் தமது வீடுகளிற் செய்யப்படும் விவாகம், சிரார்த்தம் முதலிய எந்தச்சடங்குகளிலும் தங்கள் ஆசாரியர்களாகிய சைவக்குருக்கள்களையே முதன்மையாகவைத்து நடத்தல்வேண்டும். அந்தணராகியநமக்குச் சிவாகமங்களிலே விதித்சூதக நாளளவு பத்து நாளேயாகவும், சோழதேசத்தில் நமது சைவமரபினராகியமுதலியார், கார்காத்தார் என்ற பிரிவினர் அவ்வாறேயநுஷ்டித்து வரவும், நம்மவருட்சிலர் சூதக எல்லையை முறைபிறழக்கொண்டு நடப்பது ஓர் பெருந்தவறு அதனை விரைவில் ஒழித்துவிடவேண்டும். சந்தானவிருத்தியின்பொருட்டு நமது முன்னோர்களேற்படுத்திய கோத்திரம் முதலிய நல்லவழக்கங்களை அநுசரித்தே சைவமுதலியார்களும், கார்காத்தாரும் விவாகம் முதலிய காரியங்களை நடத்திவரவும் நம்மிற்சிலர் மட்டும் அந்நல்ல வழக்கங்களை யநுசரியாது கைநழுவவிடுவது நமதுகுடும்பவிருத்திக்கும் ஜாதிவரம்பிற்கும் எவ்வளவு கேட்டையும்நாசத்தையும் விளைத்துக்கொண்டிருக்கிறதென்பதை நம்சைவப்பிரபுக்கள் ஆலோசித்து அவற்றை மீண்டும் கைக்கொள்வார்களாக ஸ்மார்த்தர் தம் மக்களுக்கு எழுவயதிலேயே உபநயனமும், மந்திரோபதேசமும் செய்வித்தலால் அவர்கள் வணங்கும் கடவுள் பாட்டு அநுக்கிரகம் பெருவதோடு, உலகமதிப்பினும் மேம்பட யேதுவாயிருக்கிறது அதுபோலச்சைவர்களும் தமதுசிறுவர், சிறுமியருக்கு இளமையிலே கல்விகற்பித்து, உரியவயதுகளில்நற்கலைக்குறிகுறியாகிய பூநூலினையணிவித்து சைவதீக்ஷையுஞ் செய்வித்தல் இன்றியமையாதகடனும் அன்றியும் சூத்திரர் என்ற அவமைப்பெயரை வழக்கிலும் சட்டக்

தினும் ஏற்றுக்கொள்ளாது செய்யவேண்டிய காரியங்களனைத்தையும் இப்பொழுதே கொள்ளுதல் படிப்பும் அறிவுமுள்ள சைவபிரபுக்கள்செய்தற்குரியமுதல்வேலையாகும்.

சைவ சமயத்திலே பிறந்தவர்கள், இருவகையாக நிலைகெட்டு நிற்கின்றார்கள். ஒருதிறத்தார் தமது சமயக் கல்வி அறிவு ஒழுக்கங்களைக் கைவிட்டுப் பெயருக்கு மாத்திரம், சைவர்களென்றிருந்து, ஸ்மார்த்தராகிய அந்நியமதத்தினருக்குத் தொண்டுசெய்து பொருள் நஷ்டமும், அவமானமும், அறியாமையும் தமக்கு அணிகலன்களாக நினைத்து மகிழ்கின்றார்கள். மற்றொருதிறத்தார் வயிறு பிழைத்தற்பொருட்டு ஆங்கிலங்கற்பான்றொடங்கி அதிலே தேர்ச்சிபெற்றும் பெருதவர்களும் பலர் தமது சமயநூல்களைக்கல்லாது, சமயம் குலம் முதலியனநல்லனவல்லவென்றுகொண்டு கடவுள் வழிபாடொழிந்து, குலவரம்பையும் அழித்துவருகின்றனர். இவர்கள் தமது மரபினுயர்வை ஆராய்ந்தறியாமையினாலே ஊனுன்பார்க்கும் அதனை யொழித்தார்க்கும் உள்ளவேறுபாடுதெரியாதுமயங்குகின்றனர். ஊனுண்பார் கொலைசெய்தலினால் வரும் பாவத்தையும், ஊனின் அருவருப்பையும், அதனையுண்பதனால்வரும் கேட்டையுமுணராமல் நிற்கின்றனர். ஊனுண்டல், ஜீவகாருண்யத்திற்கு முற்றிலும் மாறுபட்டதென்பதும், எண்ணிலா நோய்களுக்கு வித்தாமென்பதும், மயக்கம் அஜீரணம் முதலிய தீக்குணங்களைத் தந்து மூர்க்கத் தன்மையை மிகுதிப்படுத்துமென்பதும், மனத்தூய்மைக்கு நேர்பகை யென்பதும் சைவர்கொள்கை. உலகமெங்கும் ஊனுண்பவர் பெரும்பாலும் கள்ளுண்டல் என்னும் தீயவழக்கத்திற்கு இரையாகிக் கழிக்கின்றனர். ஊனுண்பாரொடு கலந்துண்பது தக்கசைவனுக்குமிகுந்த அருவருப்பைவிளைப்பதியல்பே அங்ஙனம் கலவாதுவிலகிநிற்றல், ஊனுண்பாரும் அத்தீய வழக்கத்தைவிட்டு ஒழித்தற்குப் பெரிய தூண்டுகோலாம். அருவருப்பில்லாத சைவன் ஊனுண்பாரொடு கலப்பின் தனது நன்னிலையையுங் கெடுத்துப் புலாலுண்ணும் வழக்கமும் உலகிற் பரவுவதற்குத் துணைசெய்கின்றான். ஆதலால் ஊனையொழித்துத் தூயவுண்வுகொள்ளும் சைவவொழுக்கத்தையாவர்க்கும்போதித்தலும், அந்நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்து அதன் கண் நிலை பெற்று நிற்பவரோடு மாத்திரம் கலந்துண்டலுமே

சைவர்களுக்கு ஏற்றமுடைத்தாம் பரம்பரையைத்திரு த்த முயல்கின்றவர்களுட்பலர் (Social Reformers) எனும் அனும் வகுப்பினராதலால் உணவின் சீர் திருத்தத்தைப்பற்றிச் சற்றும் கவனிப்பதில்லை. சைவர்கள் ஒன்றுமையாகிய தங்களுடைய வுயர்ந்தகொள்கையைப் பெருங்கவலையோடும் கூர்மையோடும் பாதுகாத்து அச்சிவகாருண்ய வொழுக்கத்தை எக்காலத்தும் எவ்விடத்தும் நிலைநாட்டிபோற்ற வேண்டும் தமது சிறுவர்கள் சிறுமிபருக்குச் சைவசமய நூல்களையும், தமது மேன்மைக்கு மூலகாரணமாகிய சமய வொழுக்கத்தையும் முறைப்படி கற்பித்தல் வேண்டும்.

இனிச்சிவாலயங்களிலே ஸ்மார்த்தர்கள் நிச்சயிக்கிறபடி சிவராத்திரி முதலியவைகளை நிகழ்விப்பதும், சிவபெருமானுக்குச் சோட ஜோப சாரங்களிலொன்றாகிய தமிழ்மறையோதுதல் முடிதற்குமுன்னே பிரசாதம் முதலியன செலவழித்தலும், அதீக்ஷதர்களாகிய ஸ்மார்த்தர்களை அர்த்த மண்டபத்திற்குப்புக விட்டுக் கூத்தால் விளைத்தலும், திருவிழாக்களிலேசைவர்களுக்கும் சிவனடியார்களுக்கும் மகேசுரபூஜை செய்வதற்குப் பதிலாகக்கேவலம் அந்நிய மதஸ்தராகியஸ்மார்த்தருக்கு மிகுந்த பணஞ் செலவிட்டு விலாப்புடைக்க அன்னங் கொடுத்துத் திருக்கோயிலை உணவுச்சாலை யாக்குதலும் திருநீறுதானும் நன்றாயணியத் தெரியாத ஸ்மார்த்தர் போற்றி முதலிய அந்நிய மதத்தினரைச் சிவாலயங்களில் அர்ச்சகராய் நியமித்தலும், தங்களுடைய சைவ சமயத்திற்கும் ஆகமத்திற்கு முற்றிலும், பொருத்தமில்லாத பாதகங்களென்பதை நமது தருமகருத்தர்கள் சற்றும் உணர்ந்திலர் போலும்!

" பேர்கொண்ட பார்ப்பான் பிரானறன்னை அர்ச்சிக்கில்
போர்கொண்ட வேந்தர்குப்பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டிற்குப் பஞ்சமுமா மென்றே
சீர்கொண்ட நந்தி எனக்குரைத் தானே " —

—9ம் திருமுறையாகிய திருமூலர் திருமந்திரம்

சிவாலயங்களில் நித்தியபூஜை, உற்சவம், பிரதிஷ்டை முதலிய யாவற்றையும் விதிக்கும் சிவாகமங்

களிற் புகுந்து பூஜைமுதலியன செய்தற்கு ஒருக்காலும் அருகரல்லரென முறையிட்டு முழங்குகின்றன. சைவ சமயபரம்பரை வழக்கமும் இதுவரை அவ்வாறேயிருந்து வருகிறது இவற்றை யெல்லாம் நமது தர்மகர்த்தர்கள் கவனியாது மலையாள தேசத்தினின்று வயிறு பிழைக்க வந்தேறிய நம்பூதிரியும் போற்றிகளுக்கும் ஸ்மார்த்தர்களுக்கும். பரமாச்சாரியத்துவங் கொடுத்து அவர்களைச் சிவாலயங்களிற் பூசனை செய்யுமாறு நியமிப்பது கலிகாலக் கொடுமை களிலொன்றே போலும். ஸ்மார்த்தர் முதலியோர் மூலஸ்தானத்திற்குட் பிரவேசிப்பின் சிவாகம விதிப்படி பரிகாரங்கள் செய்யாதவரை, அக்கோயில் களிற் தெய்வசாநித்தியமும் அருளும் குறைந்து ஒழிந்துபோமென்பது சிவாகமங்களின் றுணிபு. அதீக்ஷிதர் களாகிய ஸ்மார்த்தர் செய்யும் நெய்வேத்தியம் முதலியன சிவப்பிரீதியாகா வென்பதும், அவை சுத்தசைவ சீலர்களாற் தொடுதற்குத் தகுதியில்லாத நிஷேத மெனத் தள்ளப்படுமென்பதுப், நமது தருமகர்த்தர் களும் ஆலயவதிகாரிகளும் கவனித்தல் வேண்டும். சிவாலயங்களிலே சிவபெருமானுக்குச் சமர்ப்பிக்கப் படுங் கற்பூரதீபம். சிவாகமவிதிப்படி மதுரை முதலிய வடதேசத்துச் சிவஸ்தலங்களெங்கும் ஆராதனைக்குப் பின் வழிபடுவோர்யாவருக்கும் பிரசாதித்து வருகின்ற நல்ல வளக்கத்திற்கு மாறாகத் திருநெல்வேலி ஜில்லாவி லுள்ள சிற் சில சிவஸ்தலங்களிற் பிராமணருக்கு மாத்திரமே கொடுத்தால் எவ்வளவு நியாய விரோதமான செய்கை யென்பதை யுணர்ந்து அவற்றை நம் தருமகர்த் தர்களாசிராய் நடத்தல்வேண்டும் இன்னுமிதுபோன்ற அநேக தப்பு ஆசாரங்களுக்கும், சமயவிரோதமான துர்வழக்கங்களுக்கும் ஆலயங்களில் நூதனமாயிடங் கொடுத்தற்குக்காரணம், நம் தருமகருத்தர்களுக்குச் சமயவறிவாதல், பரம்பரை வழக்கறிவாதல், சிறிது மின்மையாலன்றோ? அன்றேல் தம் சுய நயங்களைக்கருதியோ? சொற்சத்தியும் அதிகாரமும் நாடியோ? சைவ தருமகருத்தர்களுந் தேவஸ்தானக்கம்மிட்டி மெம்பர் களும் நமது சமயத்தை இப்படிப் பாழாக்கி நாசயாக்குகின்றார்கள்.

நமது சைவசமயமும் சிவாலயங்களுமிவ்விதந்

தற் பொருட்டும், சைவசித்தாந்த நூல்களைப்போதிப்ப தற்கும், சைவர்களுக்குத் தீக்ஷை சமயானுஷ்டானம் உபதேசம் முதலியன அநுக்கிரகித்தற் பொருட்டுமே தம் வசம் ஒப்புவிக்கப்பட்ட அளவில்லாத பொருள்களை யெல்லாம் சைவமடாதிபதிகள் தங்களது நெறிக்கு விரோதமான தீயவழிகளிற் செலவழித்து மென்மேலும் பாவத்தையும்பழியையுந் திரள்திரளாய்த் தேடிக்கட்டுகிறார்கள். இதனை விவேகிகளாயுள்ள சைவசமயிகளுஞ் சைவப்பிரபுக்களும் பொறுமையோடு பார்த்துக் கொண்டிருத்தல், அந்தோ! பரிதாபம்! இனியேனும் சைவப்பிரபுக்கள் ஒன்று சேர்ந்து அந்த சைவாச்சாரியர்களை யெந்த வழியிலாயினுந்திருத்த முறசெய்து அவர்கள் வசமுள்ள தருமப் பெருநிதிகளைத் தமது சமயக்கல்வி வளர்ந்தோங்குமாறு பயன்படுத்துவாராக. அங்ஙனம் நம் சைவமடங்களை நாமே சீர்திருத்திக் கொள்ளாத பக்ஷத்தில், நமது சிவாலயங்கள் சைவாதீனங்களிலுள்ள பெருநிதிகள்யாவும் சிற்சில ஸ்மார்த்தர்களின் தந்திரோபாயத்தாற் றோன்றி வளரும் தருமரக்ஷணசபை வாயிலாகச் சைவசமயத்திற்கும் சைவர்களுக்கும் யாதொருபயனு மின்றிச்சிறிது காலத்திற்குள் அந்நிய மதத்தினராட்சிக்குட் படுந்தருவாயிலிருக்கின்றன. இச்சபைகளின் மூலமாக ஸ்மார்த்தர்கள் நமது சிவாலயங்களையும் நமது சைவமடங்களையும் கைப்பற்ற முயல்வது அநீதியான செயலும் அடாதகாரியமுமாகும் சைவாகமங்களைப் பிரமாணமாகக்கொண்டுள்ள சைவர்களே, அவற்றின்படி கட்டப்பட்ட சிவாலயங்களையும் சிவாகமங்களையே தலைமேற்கொண்டொழுகும்சைவாதீனங்களையும்சீர்திருத்துவதற்கும் பாதுகாத்தற்கு முரிமையுடையவர்கள். சிவாகமங்களை அநாதரன்வம், பிரமாணமல்ல, எனக்கொண்ட சங்கராச்சாரியாது சிஷ்யர்களும் சிவாகமத்தை விரோதித்து நடக்கும் ஸ்மார்த்தர் போன்ற அந்நியமதத்தினரும் சைவதருமங்களைமேற்பார்ப்பதற்கு ஒருக்காலும் அருகராக மாட்டார்கள். ஆகமிகளாற் கட்டப்பட்ட கோவில்களையும்மடங்களையும் மேற்பார்ப்பதற்கு சைவாகமிகளே சிறந்தபாத்தியதை யுள்ளவர்கள். மகம்மதியருள் ஷபாவகுப்பினர் கட்டியபள்ளிவாசல் மசூதிகளைச் சன்னிவகுப்பினரை மேற்பார்க்கும்படி நியமிப்பது எப்படிச் சட்டத்திற்கு செல்லதக்கவல்லவோ அப்படியே

சைவாகமிகள் கட்டிய ஆலயங்களையும் மடங்களையு
சைவசம்பந்தம் சிறிதுமில்லாத புறச்சமயத்தவரினு
பகைஞரெனப் புறக்கணிக்கப்பட்ட ஸ்மார்த்தர்களே மே
பார்க்கும்படி நியமிப்பது சட்டத்தில் ஒருக்காலும் செ
லத்தக்கதில்லையென்பதையும் சாஸ்திரநியாய விரோ
மென்பதையும் சைவமடாதிபதிகளும் பிரபுக்களு
உணர்ந்து வேலைசெய்யவேண்டும். அவ்வாறுவிரைவி
செய்யவில்லையாகில், இராமேசுரம், வைத்தீசுரன்கோவி
போன்ற பெரியசிவஸ்தலங்களில்மட்டுமோ. சைவமட
களிலுங்கூட சைவர்கள் அரும்பாடுபட்டுத்தேடிவைத்
சொத்துக்கள் யாவையும் சைவசமயிகளுக்கும் உலக
தாருக்கும் ஒருசிறிதும் பயன்படாமற் பிராமணர்களுக்
மட்டுமே சமஸ்கிருத பாடசாலையும், அவர்கள் மத
கல்வியுமே சிறக்க அவ்வொருஜாதியாரே மேம்பட்டு
கொழுத்தோங்குதற்கிடமாகிச் சிவதருமங்களின் நோ
கங்களெல்லாம் நிறைவேறாது சிதைந்து ஒழியும் நமத
சமயமும் அறநிதிகளும் நசித்தொழியவே, நாம்மக்கள்
யிருந்தும் விலங்கிற்கும் கேவலமான நிலைமையயை
ந்து இந்து சமயத்திலிருப்பதைப் பார்க்கிலும் தமது
சமயமின்னதென்றறிந்து தமது உரிமைகளை நிலைப்பெ
பாதுகாக்கும் மகம்மதியமதம், கிரிஸ்துமதம் முதலி
அந்நியமதத்திற் பிரவேசித்தல்மிகமேன்மையானதென்
தோன்றும் ஆதலால் நமது சமயத்தையும் நமது சை
தருமங்களையும் இருகண்போல குறிகொண்டு பாது
காத்தல் நமது பெறுவாழ்விற்கும் மேம்பாட்டிற்கு
அத்தியாவசியமானசாதனமாம்.

## முடிவுரை:—

ஆகவே சைவமரபினர்யாவரும் தமது ஜாதிசம
முன்னேற்றத்திற்குவேண்டிய முயர்ச்சிகள் யாவற்றை
யும் விரைவிற் செய்தல்வேண்டும். நமது சைவமறபி
பிறந்த சிறுவர்சிறுமியர்யாவருக்கும் தவறாது கல்வியு
சமயஞானமும் போதிப்பதற்கு வேண்டியநிதியை
கொடுத்துதவுவதே, தாங்கள் செய்தற்குறிய முத
தருமமும் முக்கியகடமையுமென்று நம் சைவபி
புக்கள் கருத வேண்டும். நமது சைவமரபின

யாவரும் தமது மேன்மையான குலகுருவாய சமயா நுஷ்டானம், தீக்ஷை, பூணுல்முதலிய சமஸ்காரங்களை உரியவயதுகளில் தமது குழந்தைகளுக்கு முறைப்படி தவறாது அநுஷ்டித்து வரவேண்டும், நமதுமரபினர் சந்ததி விருத்தியாயோங்கும் பொருட்டு குலவரம்பு பாதுகாத்தற்பொருட்டும் கோத்திரங்களையநுசரித்தே விவாகங்கள் செய்யவேண்டும் இன்னும் நமது சைவால யங்கள் சைவமடங்களிலுள்ள எண்ணிறந்த கோடித் திரவியங்களை அந்நியர்கைப் பற்றுவதைத் தடுத்தற் பொருட்டும், அத்தருமங்களின் சிறந்த நோக்கங்கள் பூரணமாய் நிறைவேறும் பொருட்டும், நமது ஜாதி சமயத்தலைவர்கள் ஒருங்குகூடி ஓர் சைவமகாஜனசபை யும் சாஸ்வத நிதியும் நிலைபெறச்செய்தல் வேண்டும்.



PRINTED AT THE G. V. PRESS, TENKASI.